Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**நடைமுறை**

நடை முறைக்கு ஏற்ற படி செயல்படுவதும் ஒரு லட்சியத்தின் மீது தான் கட்டப்பட வேண்டும்.

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**மொழி**

எந்த ஒரு மொழியின் சிறப்பும் பெரும்பாலும் அம் மொழியின் மூலம் அறியக்கிடக்கும் கருத்துக்களைப் பொறுத்துத் தான் இருக்கும்.



மலர்: 7 சென்னை: 6 - 9 - 1983 செவ்வாய் வெளியீடு: 7 - 9 - 1983 புதன் இதழ் 317

∴ முதல்வருக்கு லஞ்சம் கொடுத்ததாக மாணிக்கமோ-சுந்தரமூர்த்தியோ கூறவில்லை

∴ மாணிக்கம்-சுந்தரமூர்த்தி ஆகியோரின் சாட்சியம் முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது

∴ நீங்களாவது விளக்கம் கொடுங்களேன்

## விசாரணைக் கமிஷன் நீதிபதி கேள்வி:

# தி.மு.க. வக்கில் திணறல்

## பதில் கூற முடியாமல் தவிப்பு

**சென்னை, செப். 6- முதல்வரும் மற்ற அமைச்சர்களும் லஞ்சம் வாங்கியதாக கூறுகிறீர்கள்; ஆனால் லஞ்சம் கொடுத்ததாக மாணிக்கமோ-சுந்தரமூர்த்தியோ கூறவில்லை என்று நீதிபதி ராமபிரசாத்ராவ் கூறினார்.**

**மேலும் மாணிக்கம் சுந்தரமூர்த்தியின் சாட்சியம் முன்னுக்குப்பின் முரணாக உள்ளது; எனவே நீங்களாவது விளக்கம் கொடுங்கள் என்று தி.மு.க. தரப்பு வக்கீலிடம் நீதிபதி கேட்டபோது அந்த வக்கீல் பதில் அளிக்க முடியாமல் திணறினார்.**

சாராயக்கலவை ஆலை உரிமம் வழங்குவதில் முறைகேடு நடந்திருப்பதாகபுகார்கூறப்பட்டதைத் தொடர்ந்து விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டது தெரிந்ததே.

நீதிபதி ராமபிரசாத் ராவ் கமிஷன் முன்பாக இன்று ஆற்காடு வீராசாமியின் வக்கீல் கிருஷ்ணன் வாதத்தை எடுத்துரைத்தார்.

கமிஷன் முன்பு தாக்கல் செய்யப்பட்ட 3 பிரமாணப் பத்திரங்களில் குற்றச்சாட்டு கூறப்பட்டிருப்பதாக கிருஷ்ணன் கூறினார்.

அந்த மனுதாரர்களை விசாரிக்க அழைக்க வேண்டும் என்று கிருஷ்ணன் கேட்டுக் கொண்டார். அதற்கு அமைச்சர்கள்எஸ்.டி.எஸ். பொன்னையன் ஆகியோர் சார்பில் ஆஜராகும் வழக்கறிஞர் வேணுகோபால் பதில் அளித்தார்.

அந்த 3 மனுக்களை கொடுத்தவர்கள் தங்களை விசாரிக்க அழைக்குமாறு மனுச்செய்யவில்லை. மேலும் கமிஷன் விசாரணைக்கும் அவர்கள் வரவில்லை. அவர்களைசாட்சியாக அழைக்க முடியாமல் போய்விட்டது என்று வேணுகோபால் பதில் அளித்தார்.

### விளக்கம் கேட்ட நீதிபதி

பின்னர் தொடர்ந்து கிருஷ்ணன் பேசும்போது முதல்வரும் அமைச்சர்களும் அதிகாரத்தை தவறாக பயன்படுத்தி பணம் பெற்றிருப்பதாக இங்கே சாட்சி சொன்னவர்களும் குறிப்பிட்டிருக்கிறார்கள். பிரமாணப்பத்திரத்திலும் இதுபற்றி தெளிவாக குற்றச்சாட்டுக்கள் கூறப்பட்டுள்ளன என்று வழக்கறிஞர் கிருஷ்ணன் கூறினார்.

அப்போது நீதிபதிகுறுக்கிட்டு கிருஷ்ணனிடம் சில சட்ட விளக்கங்களை கோரினார் நீதிபதிமேலும் கூறியதாவது:-

இங்கே சாட்சி சொன்னவர்கள் வெவ்வேறு விதமாக சொல்லியிருக்கிறார்கள். ஐக்கோர்ட்டில் அவர்கள் போட்டுள்ள வழக்கில் சுகுமாரனுக்கு கடன் கொடுத்திருப்பதாக குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆனால்பிரயாணப்பத்திரத்தில் கமிஷன் கொடுத்ததாகக் கூறியிருக்கிறார்கள். மேலும் இங்கே சாட்சி சொல்லும் போது தாங்கள் குறிப்பிட்ட கடமைகளைச் செய்வதற்காக சுகுமாருக்குபணம்கொடுத்தோம் என்று அவர்கள் (மாணிக்கம், சுந்தரமூர்த்தி, ரவீந்திரநாத்] சாட்சிசொல்லியிருக்கிறார்கள்

அவர்களது கருத்தில் முன்னுக்குப்பின் முரண்பாடு உள்ளது. முதல்வருக்கோ, அமைச்சருக்கோ பணம் கொடுத்ததாக அவர்கள் சொல்லவில்லை.

முதல்வரோ அமைச்சர்களோ பணம் கேட்டதாகவும் யாரும் சாட்சி சொல்லவில்லை.

இந்த நிலையில் குற்றம் சாட்டுகிற தரப்பில்உள்ள நீங்கள் (தி.மு க. வக்கீல்) இந்தக் கமிஷனுக்கு உதவுங்கள். அமைச்சர்கள் வாங்கினார்களா என்பது போன்ற விளக்கங்களைச் சொல்லுங்கள்.

### விளக்கம் கூறாமல் நழுவல்

கிருஷ்ணன் (குறுக்கீடு): நீதிபதி அவர்களே இதுபற்றி மாணிக்கத்தின் வக்கீல் ஜி. ராமசாமி ஏற்கனவே பேசியுள்ளார். இன்னும் உங்கள் முன் பேச இருக்கிறார்.

நீதிபதி: இப்போது நீங்கள் அந்தப் பிரச்னையை களப்பியிருக்கிறீர்கள். எனவே சட்டத்தில் உள்ள விவகாரங்களை இங்கே கூறிகமிஷனுக்கு உதவுங்கள், நீங்கள் இதையெல்லாம் தெளிவு படுத்தாமல் நான் எப்படி ஒரு முடிவுக்கு வரமுடியும்?

கிருஷ்ணன்:- நீதிபதி அவர்களே மன்னிக்க வேண்டும் நான் பிறகு இன்னொரு நாள் தங்களிடம் அதுபற்றி விளக்கமாக எடுத்துரைக்கிறேன்.

### இங்கு வராதது ஏன்?

இவ்வாறு கிருஷ்ணன் கூறியதும் முன்னாள் ஐ.ஜி.மாணிக்கத்தின் வக்கீல் ராமசாமி வராதது பற்றி நீதிபதி கேட்டார். ராமசாமியின் உதவி வக்கீல் எழுந்து அவர் வெள்ளிக்கிழமை வந்து பேசுவார் என்று பதில் அளித்தார்.

உடனே அமைச்சர்கள் எஸ்.டி.எஸ், பொன்னையன் ஆகியோரின் வக்கீல் குறுக்கிட்டு நேற்று அவர் உடல் நலம் சரியில்லாமல் படுக்கையில் இருந்ததாக சொன்னார்கள். ஆனால் இன்று அவர் ஐகோர்ட்டில் ஆஜராகியிருக்கிறார். கமிஷனுக்கு வரவேண்டும் என்று அவர் ஆர்வம் காட்டவில்லை என்று கூறினார்.

உடனே தி.மு.க.தரப்பு வக்கீல் கிருஷ்ணன் குறுக்கிட்டு நவீன மருந்துகள் எல்லாம் வந்துள்ளன. எனவே ஒரே நாளில் குணமடைந்து விட முடியும் என்று குறிப்பிட்டார்.

நீதிபதி விசாரணையை வரும் வியாழக்கிழமைக்கு (8ம் தேதி) தள்ளி வைத்தார்.

---

ஆந்திராவில் வெளி மார்க்கெட்டில்

## அரிசி வாங்க மத்திய அரசு அனுமதி

சென்னை, செப். 6— தமிழக அரசு வெளி மாநிலங்களில் இருந்து ஒரு லட்சம் டன் அரிசி வாங்குவதற்காக மத்திய அரசிடம் அனுமதி கேட்டு இருந்தது.

சில தினங்களுக்கு முன்பு தமிழக அரசு அதிகாரிகள் டெல்லிக்குச் சென்று விவாதித்தனர்.

அதைத் தொடர்ந்து ஆந்திராவில் இருந்து வெளி மார்க்கெட்டில் 30 ஆயிரம் டன் அரிசி வாங்குவதற்கு மத்திய அரசு அனுமதி அளித்து இருக்கிறது.

மேலும் மத்திய தொகுப்பில் இருந்து தமிழ் நாட்டுக்கு இம்மாதம் 30 ஆயிரம் டன் அரிசியும், 30ஆயிரம் டன் கோதுமையும்மத்திய அரசு வழங்குகிறது.

---

கச்சத்தீவு அருகே

## படகு விபத்து: 21 பேர் கதி என்ன?

மதுரை, செப். 6— ராமேஸ்வரத்தில் இருந்துதலைமன்னாருக்கு இலங்கைத் தமிழர்கள் சுமார்30பேர்விசைப்படகு ஒன்றில் ஏறிச் சென்றதாக கூறப்படுகிறது.

இந்தப் படகு கச்சத்தீவு அருகே சென்றபோது கவிழ்ந்துவிட்டது.

இதில் இருந்தவர்கள் கடலில் மூழ்கித் தத்தளித்தனர். 9 பேர் எப்படியோ நீந்தி ராமேஸ்வரம் வந்து சேர்ந்தனர். மற்றவர்கள் என்ன ஆனார்கள் என்பது தெரியவில்லை.

---

## இன்சாட் கோளாறை சரிப்படுத்த விஞ்ஞானிகள் தீவிரம்




**பெங்களூர் செப். 6— விண்வெளியில் ஏவி விடப்பட்டுள்ள இந்திய பல்நோக்கு தகவல் செயற்கைக்கோள் இன்சாட் 1 பியில் உள்ள சூரிய விசைப் பலகைகளை விரிய வைப்பதில் விஞ்ஞானிகள் ஓரளவு வெற்றி பெற்றுள்ளனர் இன்சாட்டுக்கு இழப்பு ஒன்றும் ஏற்படாது என்றும் அவர்கள் தெரிவித்துள்ளனர்**

**படத்தில் காணப்படும் 5 சூரிய விசைத்தகடுகளில் தற்போது 3 தகடுகள் மட்டும் ஓரளவுக்கு விரிந்துள்ளது 5 தகடுகளையும் சரியாக விரிய வைக்கும் முயற்சியில் விஞ்ஞானிகள் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.**

இந்தியா தயாரித்த பல்நோக்கு செயற்கைக் கோள் இன்சாட் 1-பி அமெரிக்காவில் இருந்து விண்வெளியில் ஏவி விடப்பட்டது தெரிந்ததே.

இந்தசெயற்கைக்கோள் இந்திய துணைக் கண்டத்துக்குமேல் நிறுத்தப்பட்டு பூமியுடன்ஒரேவழித்தடத்தில் சுற்றிவரும் பூமியுடன் ஒரே வேகத்தில் சுற்றும் அளவில் அது நிறுத்தப்பட உள்ளதால் எந்த நேரத்திலும் இந்திய துணைக் கண்டத்தின் மேலேயே அது நிலைபெற்று இருக்கும்.

### சூரிய பலகை

இப்படி நிலைபெற்று இருக்கச் செய்வதற்குமுன்னால் இன்சாட் 1 பியில் சிலசிக்கல்கள் ஏற்பட்டு விட்டன. அதற்கு வேண்டிய எரிபொருள் சக்தியை தயாரித்துக் கொள்ள வைக்கப் பட்டிருக்கும் சூரியவிசைப் பலகைகள் விரியவில்லை. இன்சாட் 1 பியில் உள்ள மொத்த சூரிய விசைப்பலகைகள்5 இதில் 3 விசைப் பலகைகளை விஞ்ஞானிகள் பெரும் முயற்சிசெய்து விரியவைத்திருக்கிறார்கள் இதன் மூலம் ஓரளவு சக்தி விண்வெளிக்கலத்துக்குகிடைக்க வழி ஏற்பட்டுள்ளது.

பூமியை அதன் சுற்று வேகத்துடன் சுற்றிவரும் போது ஒருநாளில் பாதி நாள் சூரியவெளிச்சம் படாத நிலையில் இன்சாட் இருக்கிறது. இன்சாட்டில் உள்ள பாட்டரிகள் இழந்துவிட்ட மின்சாரத்தை பெற்றுக் கொள்ளும் நிலைமையும் ஏற்படுத்தியுள்ளது

---

கோவை ஜவுளி ஆலை தொழிலாளர் போனஸ் பிரச்னை:

## தொழில் கோர்ட்டுக்கு தமிழக அரசு அனுப்பியது சரியே

உயர்நீதி மன்றம் தீர்ப்பு

**சென்னை, செப் 6 -கோவை ஜவுளி ஆலை தொழிலாளர் போனஸ் பிரச்னையை தொழில் கோர்ட்டுக்கு தமிழக அரசு அனுப்பியது சரியானது தான்என்று சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது.**

கோவை ஜவுளி ஆலை தொழிலாளர் போனஸ் பிரச்னையை தொழில் கோர்ட்டுக்கு தமிழகஅரசு அனுப்பியிருப்பது தெரிந்ததே.

கோவை ஜவுளி ஆலைத் தொழிலாளர் போனஸ் பிரச்னை பற்றி ஆலை அதிபர்களுக்கும் தொழிற் சங்கங்களுக்கும் இடையே தகராறு ஏற்பட்டது.

இது 1982ம் ஆண்டுக்குரிய போனஸ் பிரச்னை ஆகும்.

போனஸ் தொகைபற்றி இரு தரப்பாரிடையேயும் பேச்சு வார்த்தையில் சுமுக முடிவு ஏற்படவில்லை.

பேச்சு வார்த்தையில் தோல்வி ஏற்பட்டது.

ஆகவே இந்தப் பிரச்சினையைத் தமிழக அரசு தொழில் தகராறு சட்டத்தின் கீழ் தொழில் நீதி மன்றதீர்ப்புக்குஅனுப்பியது

இதற்கு தீர்வு காணப்படாத நிலையில் வேலை நிறுத்தமோ, கதவடைப்போ சட்டவிரோதமானதுஎன்றுஅறிவித்தது

அதேசமயத்தில்இரண்டு தொழிற் சங்கங்கள் இதை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் ரிட்மனு தாக்கல்செய்தன.

இவற்றை நீதிபதி எஸ். மோகன் விசாரித்து தள்ளுபடி செய்தார்.

சமரச பேச்சின்போது பிரச்னை தீராததால் தான் அரசுஇதை தொழில் நீதி மன்றத்திற்கு அனுப்பி இருக்கிறது.

தொழில் நீதிமன்றத்துக்கு அனுப்பிய போது தான் தடை உத்தரவை பிறப்பித்துள்ளது,

ஆகவே ரிட்மனுக்களை தள்ளுபடி செய்கிறேன் என்று நீதிபதி தீர்ப்பில் கூறினார்.

---

இலங்கைத் தமிழர்

## நிவாரணப் பணிகளை தீவிரப்படுத்த அனைத்துக் கட்சி குழு

**சென்னை, செப். 6- இலங்கைத்தமிழர்களுக்கு நிவாரணம் அளிப்பதற்கான பணிகளை தீவிரமாக செயல்படுத்த 18 பேர் கொண்ட அனைத்துக்கட்சித் தலைவர்கள் குழு ஒன்றை புரட்சித்தலைவர் அரசு நியமனம் செய்துள்ளது.**

இலங்கை வெறியர்களின் வன்முறைகளுக்கு ஆளாகி தமிழகம் வரும் குடும்பங்களுக்கு நிவாரணம் அளிக்கும் பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்தப் பணிகளை தீவிரமாக செயல்படுத்த வேண்டும் என்று கடந்த மாதம் 6ம் தேதி முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் நடைபெற்ற அனைத்துக் கட்சித்தலைவர்கள்கூட்டத்தில்கருத்து தெரிவிக்கப்பட்டது.

இந்தக் கருத்தினை ஏற்று தமிழக அரசு அனைத்துக் கட்சித் தலைவர்கள் மற்றும் தொழில்துறை நிபுணர்கள் கொண்ட ஆலோசனைக் குழுவை நியமித்துள்ளது.

இலங்கையில் நடக்கும் கலவரங்களால் பாதிக்கப்பட்டு அவதியுறும் தமிழர்களின் மறு வாழ்விற்காக நிதி திரட்டியும் பல்வேறு விதமான பொருள்களைசேகரித்தும் அவற்றை பாதிக்கப்பட்ட அனைவருக்கும் தகுந்த முறையில் வழங்கவும் இந்தக் குழு செயல்படும்.

நிவாரணக் குழுவில் இடம்பெற்றுள்ள கட்சித் தலைவர்களின் பெயர்கள் வருமாறு:-

ப.உ.ச., மு.கருணாநிதி பழனியாண்டி, நெல்லை ஜெபமணி, டாக்டர் சந்தோஷம், நாராயணராவ், பி. மாணிக்கம், ஏ நல்லசிவன், ஏ. கே, எஸ். அப்துல்சமது. குமரி அனந்தன், ப. நெடுமாறன், செய்குத்தம்பி ஆர். மார்க்கபந்து, பி. முனிவேலு, ஏ. ஆர். தாமோதரன், ஏ. ஆர். பெருமாள், சி. நாராயணசாமிநாயுடு, ஜி. சுவாமிநாதன் ஆகியோர் ஆவர்.

இந்த நிவாரணக் குழுவுக்கு ஒத்துழைப்பும் ஆலோசனைகளும் அளிக்க தொழில் நிபுணர்கள் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்றையும் தமிழக அரசு நியமித்துள்ளது.

இம்மாதம் 28ம் தேதி

# ஐ.நா. சபையில் பிரதமர் இந்திரா பேசுகிறார்

புதுடெல்லி, செப். 6— பிரதமர் இந்திராகாந்தி இம்மாதம் 28ம் தேதி ஐக்கிய நாடுகள் பொதுச் சபைக் கூட்டத்தில் பேசுகிறார்.

ஐ. நா பொதுச் சபைக் கூட்டம் நியூயார்க்கில் இம்மாதம் 28ம் தேதி நடைபெறுகிறது.

கூட்டு சேரா நாடுகளின் தலைவர் என்ற முறையில் முதன் முதலாக அவர் பேசுகிறார்.

பிரதமருடன் வெளி உறவு அமைச்சர் நரசிம்மராவ், ஜி. பார்த்தசாரதி, அலக்சாண்டர், ஆர். கே. தாவன் மற்றும் பல அதிகாரிகள் நியூயார்க் செல்கிறார்கள்.

பிரதமர் இந்திரா வருகிற 20-ம் தேதி கிரீஸ் நாட்டுக்கும், நிகோஷியாவுக்கும் செல்கிறார். 25-ம் தேதி பாரீஸ் செல்கிறார் 26-ம்தேதி நியூயார்க்செல்கிறார்.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 144.83

# வாக்காளர் பட்டியலில் சேர்த்தல்-திருத்தல்

## மாவட்ட-ஒன்றிய-நகர-கழக செயலாளர்கள் கவனத்திற்கு

கிராமப்புற தொகுதி வாக்காளர் பட்டியலில் சேர்க்கவும், நீக்கவும் மனுக்கள் அனுப்ப கடைசி நாள் 30-9-1983

நகர்ப்புற சட்டமன்ற பேரவைத் தொகுதி வாக்காளர் பட்டியலில் சேர்க்கவும், நீக்கவும் மனுக்கள் அனுப்ப கடைசி நாள் 7-1-1984

எனவே அந்த அந்தப் பகுதியைச் சேர்ந்த கழக கிளை பேரூராட்சி-ஒன்றிய நகரத்தைச் சேர்ந்த நிர்வாகிகள் அனைவரும் தங்கள் பகுதிக்கான வாக்காளர் பட்டியலை சரிபார்த்து விடுபட்ட வாக்காளர்களை சேர்க்கும் பணியில் தீவிரமாக ஈடுபடுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு. கழகம்

சென்னை-14
6-9-83

---

# பிரவீணா உடல்தகனம் பாக்யராஜுக்கு முதல்வர் ஆறுதல்

சென்னை. செப் 6 டைரக்டர் பாக்கியராஜின் மனைவி பிரவீணாவின் உடல் தகனம் நேற்று மாலை நடந்தது. இறுதி ஊர்வலத்தில் முதல்வா புரட்சித்தலைவர் கலந்துகொண்டு பாக்கியராஜுக்கு ஆறுதல் கூறினா

பிரவீணாவின் இறுதிச் சடங்கு நேற்று மாலை நுங்கம்பாக்கம் இடுகாட்டில் நடைபெற்றது.

நோய்வாய்ப்பட்டு இருந்த பிரவீணாவின் உயிர் நேற்று காலை பிரிந்தது தெரிந்ததே.

இறுதிஊர்வலம் நேற்று பிற்பகல் 4.40 மணிக்கு புறப்பட்டது.

மலர்களால் அலங்கரிக்கப்பட்ட வேனின்மீது பிரவீணாவின் உடல் வைக்கப்பட்டு இருந்தது.

வேனுக்கு முன்னதாக பாக்கியராஜ் தீச்சட்டி ஏந்தி துக்கம் தாளாமல் நடந்து சென்றார்.

அமைச்சர்கள் திருநாவுக்கரசு, கோமதிசீனிவாசன், விஜயலட்சுமி, மேலவை துணைத்தலைவர்புலமைப்பித்தன் மற்றும் கலை உலகப் பிரமுகர்கள் ஏராளமானவர்கள் நடந்து சென்றனர்,

பாக்கியராஜ் வீட்டில் இருந்து புறப்பட்ட இறுதி ஊர்வலம் வள்ளுவர் கோட்டத்தெரு, ராஜாஜி மெயின்ரோடு, குளக்கரை சாலை வழியாக நுங்கம்பாக்கம் லயோலா கல்லூரி அருகே உள்ள மயானத்தை அடைந்தது.

லயோலாகல்லூரிஅருகில் இறுதி ஊர்வலம் வந்த போது முதல்வர் புரட்சித் தலைவர் வந்து ஊர்வலத்தில் கலந்து கொண்டார்.

மாலை 5.45 மணிக்கு பிரவீணாவின் சிதைக்கு பாக்கியராஜ்எரியூட்டினார் அப்போது அவர்ஓவென்று கதறிக் கதறி அழுதார்.

## முதல்வர் ஆறுதல்

கதறி அழுத பாக்கியராஜை முதல்வர் புரட்சித் தலைவர் பாசத்தோடு கைத்தாங்கலாக தாங்கிப் பிடித்துக் கொண்டு வெளியே அழைத்து வந்தார்.

பிறகு முதல்வர் புரட்சித்தலைவர் பாக்கியராஜை தமது காரில் ஏற்றிக்கொண்டார்.

பாக்கியராஜின் வீட்டில் அவரைக் கொண்டு போய் விட்டு ஆறுதல் கூறி தேற்றினார்.

---

# பேச்சாளர் பட்டியலில் இணைப்பு

**பி சேகர் (B A)**
பள்ளந்திரி கிராமம்
அண்ட் போஸ்ட்
மதுரை மாவட்டம்

**டாக்டர் பொ. ராஜேந்திரன்** B. A. B Com.
57 என்.ஜி.என். நாராயணசாமி நாயுடு வீதி
பாரதியார் ரோடு
புதுசித்தா புதூர்
கோவை-641044

**ரா. சம்பத்குமார்**
பரசுராமன் தெரு
அரூர், தர்மபுரி மாவட்டம்
பின் கோட் எண் 636908

**எஸ் பி. அக்பர்**
13-3 படே சாகிப் தெரு,
சாலையார் நத்தம்
குடியேற்றம்
வடாற்காடு மாவட்டம்
பின்கோட் எண்-632602.

**பெ. கொளஞ்சிநாதன்**
7/20 தபால் ஆபீஸ் தெரு,
செந்துறை போஸ்ட்,
அரியலூர் தாலுகா, திருச்சி மாவட்டம்.
பின்கோட் எண்—621714

**ஏ. கே மூர்த்தி Ex எம். எல். ஏ.**
அண்ணாநகர் ஜெயங்கொண்டம்
திருச்சி மாவட்டம்

**ஆனைமலை இடிமுழக்கம் இக்பால்**
ஆனைமலை, பொள்ளாச்சி தாலுக்கா
பின்கோட் எண் 642104

**கோடையிடி குருசாமி**
முத்தாணி வலங்கை ஒன்றியம்
சுந்தர பெருமாள் கோவில் போஸ்ட்,
தஞ்சை மாவட்டம்

**ஒளிமதி சாமிநாதன்**
C/o மயில் உடையார் நீடாமங்கலம்,
தஞ்சை மாவட்டம்

**கோடையிடி ராமமூர்த்தி**
C/o தெய்வேந்திரன்
நாகலாபுரம் போஸ்ட்,
விளாத்திக்குளம் தாலுகா,
நெல்லை மாவட்டம்

**கல்யாணி என்ற கூடல் மதன்**
கூடலூர் உத்தம பாளையம் தாலுகா
மதுரை மாவட்டம்

**கா. அறிவரசன்**
ஒன்றிய செயலாளர் மம்சாபுரம் போஸ்ட் திருவில்லி புத்தூர் ஒன்றியம் ராமநாதபுரம் மாவட்டம்

-ஜெயலலிதா

சென்னை—14, கொள்கைபரப்புச் செயலாளர்
6-9-83. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

பிரதமருடன் அமிர்தலிங்கம் சந்திப்பு:

# பேச்சுவார்த்தை நடத்த பார்த்தசாரதி மீண்டும் இலங்கை செல்கிறார்

புதுடில்லி, செப். 6- பிரதமர் இந்திராவின் சிறப்புத் தூதர் ஜி. பார்த்தசாரதி இலங்கை அரசுத் தலைவர்களுடன் மீண்டும் பேச்சுவார்த்தை நடத்த அடுத்த வாரம் கொழும்பு நகருக்குப் புறப்படுகிறார்.

இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுகிறார்கள் என்ற துயரச் செய்தியினை கேள்விப்பட்டவுடனேயே இலங்கைத் தமிழர்களைக்காக்க உடனடியாக மைய அரசு தலையிட வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கோரினார். அனைத்துக் கட்சித் தலைவர்களுடன் சென்று தமிழக மக்களின் உணர்வுகளை பிரதமர் இந்திராவுக்கு எடுத்துரைத்தார்.

அதனைத் தொடர்ந்து மைய அரசு துரித நடவடிக்கை எடுத்ததும் பிரதமர் இந்திராவின் சிறப்புத் தூதராக ஜி. பார்த்தசாரதி இலங்கை சென்று வந்ததும் நினைவிருக்கலாம்.

ஈழத் தனிநாடு கோரிக்கையைக் கைவிட்டால் தான் தமிழர் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துவேன் என்று இலங்கை குடியரசுத்தலைவர் ஜெயவர்த்தனே கூறி வந்தார் ஆனால்ஜி.பார்த்தசாரதி பேச்சுவார்த்தை நடத்திய பின்னர் அமிர்தலிங்கத்துடன் ஜெயவர்த்தனே பேச்சு வார்த்தை நடத்தினார்.

அதன் பின்னர் அமிர்தலிங்கம் சென்னை வந்து முதல்வர் புரட்சித்தலைவருடன் கலந்துரையாடினார். அதன் பின்னர் அவர் டெல்லி சென்றார்.

## பிரதமர் அமிர்தலிங்கம் ஆலோசனை

நேற்று (திங்கள்) பிரதமர் இந்திராவுடன் அமிர்தலிங்கம் ஒரு மணி நேரம் பேசினார். இன்றைய கட்டத்தில் இலங்கைத்தமிழர் பிரச்னையில் தங்கள்நிலை என்ன என்பதனை அமிர்தலிங்கம் பிரதமரிடம்விளக்கினார்.

பேச்சுவார்த்தையில் இலங்கை நாடாளுமன்ற தமிழ் உறுப்பினர் சம்பந்தனும் கலந்து கொண்டார்.

பிரதமருடன் பேச்சு வார்த்தை நடத்துவதற்கு முன்னர் ஜி பார்த்தசாரதி பிரதமரின்முதன்மை செயலாளர் அலெக்சாண்டர் ஆகியோருடன் அமிர்தலிங்கம் விவாதித்தார்.

இதனைத் தொடர்ந்து அடுத்தவாரம் ஜி.பார்த்தசாரதி மீண்டும் கொழும்பு நகருக்குச் செல்கிறார். நான்கு ஐந்து தினங்கள் தங்கியிருந்து இலங்கை அரசுத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்துவார்.

இந்தப் பேச்சு வார்த்தை பலன் அளிக்குமானால் அடுத்து இலங்கை அரசுத் தலைவர்களும் இலங்கை தமிழர் தலைவர்களும் சந்தித்துப் பேசுவார்கள்.

அமிர்தலிங்கத்திற்கும் அவரது துணைவியாருக்கும் பாதுகாப்பு அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் விருந்து கொடுத்தார்.

---

சத்துணவுக்கூடத்தில்

# திருட்டு: வாலிபருக்கு 3 மாதம் சிறை

காஞ்சிபுரம், செப். 6 காஞ்சிபுரம் அருகே ஓரிக்கை ஆதிதிராவிடர் நலப்பள்ளி சத்துணவுக் கூடம், என். ஜி. ஓ. குடியிருப்பு சத்துணவுக்கூடம் ஆகியவற்றில் அரிசி, பருப்பு, முதலிய பொருள்களைத் திருடிய வாலிபருக்கு கோர்ட்டில் 3மாதம் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது.

அந்த வாலிபரின் பெயர் மோகன் (வயது 27) ஓரிக்கரை காலனியைச் சேர்ந்தவர் என்று கூறப்படுகிறது.

---

கரூரில்

# அமைச்சர் குழந்தைவேலு பங்கேற்ற நிகழ்ச்சிகள்

கரூர், செப். 6- கரூரில் அமைச்சர் குழந்தைவேலும், தமிழ்நாடு குழாய் கிணற்றுக் கழகத்தலைவர் கரூர் சின்னசாமிஎம்.எல்.ஏ.வும் பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கேற்றனர்.

கரூர் பரமத்திஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த நல்லிப்பாளையத்தில் அமைச்சர் குழந்தைவேலுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

அதையடுத்து சின்னதாராபுரத்தில் பள்ளிக் கட்டிட திறப்பு விழா நிகழ்ச்சியில் அமைச்சர் குழந்தைவேலுவும், கரூர் சின்னசாமியும் பங்கேற்றனர்.

மாலை 6 மணிக்கு பாண்டி லிங்கபுரத்தில் நடந்த நிகழ்ச்சி ஒன்றில் 26 ஆதிதிராவிடர்களுக்கு வீடுகட்ட கடன்உதவி வழங்கும் விழாவில் அமைச்சர் குழந்தைவேலுவும், கரூர் சின்னசாமியும் கலந்து கொண்டனர்.

அதைத் தொடர்ந்து காங்கேயம்பாளையம் மக்கள் அமைச்சருக்கு வரவேற்பளித்தனர்.

இரவு 8 மணிக்கு தெந்நிலையில் கழகப் பொதுக் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு, கரூர் சின்னசாமி எம். எல். ஏ. அரவக்குறிச்சி கழக எம். எல். ஏ. கந்தசாமி, சங்கர், பழனிசாமி, அ.பொ.கந்தசாமி, மாரிமுத்து, ரத்தினம் ஆகியோரும்மற்றும் பலரும் பங்கேற்றனர்.

---

முன்னணி நடிகர், நடிகைகள் நடிக்கும்

# சிறுசேமிப்பு பற்றிய சினிமா: தமிழக அரசு தயாரிக்கிறது

## எஸ். எஸ். ஆர். தகவல்

சேலம் செப். 6- சிறு சேமிப்பு பற்றி தமிழக அரசு ஒரு திரைப்படம் எடுக்க இருக்கிறது என்று சிறுசேமிப்பு ஆலோசனைக் குழுதுணைத் தலைவர் எஸ்.எஸ் ஆர். கூறினார்.

இந்தப் படத்தில் சினிமாத் துறையில் உள்ள முன்னணி நடிகர்கள், நடிகைகள் நடிப்பார்கள் என்றும் அவர் கூறினார்.

சேலம் பொருட்காட்சியில் அமைக்கப்பட்டுள்ள சிறுசேமிப்புத் துறை அரங்கில் தேசிய சேமிப்பு பத்திரம்வாங்கியவர்களுக்கான குலுக்கல் நடந்தது.

இந்தக் குலுக்கலை சிறு சேமிப்பு ஆலோசனைக் குழு துணைத் தலைவர் எஸ்.எஸ்.ஆர்.தொடங்கி வைத்தார்.

## சிறு சேமிப்பில் முதலிடம்

அப்போது எஸ். எஸ். ஆர் பேசியதாவது:-

சிறுசேமிப்புத் துறையில் தமிழ்நாடு முதலிடம்வகிக்கிறது.

பேரறிஞர் அண்ணா ஆட்சி நடந்தபோது சிறு சேமிப்புத்துறை ஆலோசனைக் குழுவில் துணைத் தலைவராக புரட்சித் தலைவரை அண்ணா நியமித்தார்.

இப்போது புரட்சித் தலைவர் அந்தப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து இருக்கிறார்.

இந்தப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்த போது அச்சப்பட்டேன்இப்போது பெருமைப்படுகிறேன்.

## அதிக வட்டி

சிறுசேமிப்பில் போடும் பணத்திற்கு அதிக வட்டி தரப்படுகிறது.

ஒருகுறிப்பிட்டதொகை வரை வருமான வரி கிடையாது.அதோடு சேமிப்பில் போடும் பணம் பாதுகாப்பாக இருக்கும்.

இந்தப் பணம் நாட்டுக்கும், மக்களுக்கும் பயன் படும்.

சேமிக்கும் பழக்கத்தை மக்களிடையே தீவிரப்படுத்த பல நடவடிக்கைகளை அரசு எடுத்து வருகிறது.

சிறுசேமிப்பின் முக்கியத்துவத்தை மக்களிடம் விளக்குவதற்காக தமிழக அரசு ஒரு பிரச்சார திரைப் படத்தை தயாரிக்க திட்டமிட்டுள்ளது.

இந்த படத்தில் தமிழில் முன்னணி நட்சத்திரங்களாக திகழும் நடிகர், நடிகைகள் நடிப்பார்கள்.

இவ்வாறு எஸ். எஸ் ஆர். கூறினார்.

---

# பேச்சாளர் பட்டியலில் திருத்தம்

பண்ருட்டி பல குரல் மன்னன்
**பி. கே. பீட்டர்.**
எண்: 5, காசி பிள்ளையார் கோவில் தெரு,
பண்ருட்டி,
தென்னாற்காடு மாவட்டம்
பின்கோட் எண்: 607106.

-ஜெயலலிதா

சென்னை-14 கொள்கைப் பரப்பு செயலாளர்
6-9-83 அனைத்திந்திய அண்ணா தி. மு.கழகம்

---

# பேரறிஞர் அண்ணா பவள விழா!

இம்மாதம் 15-ந் தேதி பேரறிஞர் அண்ணா அவர்களது பவளவிழாவையொட்டி மாண்புமிகு தமிழக முதல்வர் **புரட்சித்தலைவர்** அவர்கள் மதுரை மாநகரில் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்து உரை ஆற்றுவார்கள்.

-ஜெயலலிதா

சென்னை-14 கொள்கை பரப்புச்செயலாளர்
6-9-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

# செப்டம்பர் 13-ல் கழகத் தலைமை செயற்குழுக் கூட்டம்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத் தலைமை செயற்குழுக் கூட்டம், வருகிற 13-9-83 அன்று (செவ்வாய்க்கிழமை) காலை 10 மணிக்கு கழக அவைத் தலைவர்உயர்திரு **ஈ.வெ. அ வள்ளிமுத்து** எம். எல். சி. அவர்கள் தலைமையில்,

மாண்புமிகு **புரட்சித்தலைவர்** அவர்கள்

முன்னிலையில் சென்னையில் நடைபெற உள்ளது.

செயற்குழு உறுப்பினர்களுக்கு அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டுள்ளன.

உறுப்பினர்கள் தவறாது கலந்துகொள்ளகேட்டுக் கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு கழகம்

சென்னை 14
6 9-83

## 1983-84ம் ஆண்டில் மேலும்

# 30 நகராட்சிகளில் தன்னிறைவு திட்டத்தை செயல்படுத்த முடிவு

## அமைச்சர் குழந்தைவேலு அறிவிப்பு

**சென்னை, செப். 6- 20 நகராட்சிகளில் தற்போது 5 கோடி ரூபாய் செலவில் நிறைவேற்றப்பட்டு வரும் தன்னிறைவுத் திட்டம், 1983-84ம் ஆண்டில் மேலும் 30 நகராட்சிகளில் செயல்படுத்தப்பட உள்ளதாக அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

அமைச்சர் குழந்தைவேலு சென்னை வானொலியில் ''மக்கள் வாழ்விற்கு மனநிறைவு தரும் மகத்தான திட்டங்கள்'' என்ற தலைப்பில் பேசுகையில்கூறியதாவது:

புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது முதல் தமிழக மக்களின் வாழ்வில், மன நிறைவு ஏற்படும் வகையில், எண்ணற்ற திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

சமுதாயத் தேவைகள் என்பவை வீட்டுக்கு வெளியே மனிதனுக்குத் தேவைப்படுபவை. எடுத்துக்காட்டாக நல்ல சாலைவசதி ஒவ்வொரு ஊருக்கும் தேவையான ஒன்று. அதுபோல் பள்ளி வசதி, மருத்துவ வசதி போன்ற எண்ணற்ற வசதிகள் சமுதாயத்திற்கு கண்டிப்பாகத் தேவைப்படுகின்றன.

எனவே தான், தனி மனிதன் வாழ்வில் மட்டுமின்றி சமுதாயத்தின் நலத்திலும் அக்கறைகொண்ட புரட்சித் தலைவர் தமிழகமெங்கும் தன்னிறைவுத் திட்டத்தை அறிமுகப்படுத்தினார். வேறு எந்த மாநிலமும் இதுவரை நிறைவேற்றியிராத இந்தத் திட்டத்தை மூன்றாண்டு கால அளவிற்குள் தமிழகத்தின் 378ஊராட்சி ஒன்றியங்களிலும் நிறைவேற்றிய பெருமை இன்றைய தமிழக அரசுக்கு உண்டு.

குடிநீர் வசதி, சாலை அமைத்தல், பள்ளிக்கூடங்கள் கட்டுதல், பாசன, மருத்துவ, மகப்பேறு வசதிகள் ஆதிதிராவிட மக்களுக்கு காலனியிலிருந்து மயானப் பாதைகள் போன்ற எண்ணற்ற வசதிகளை குறுகியகாலத்திற்குள் தமிழகம் முழுவதும் ஏற்படுத்தித் தந்தது தன்னிறைவுத் திட்டம்.

மூன்று கட்டங்களாக 1980 லிருந்து 1983 முடிய செலவிட்ட தொகை ரூ 225 கோடி. இதில் பொதுச் சொத்துக்களாக-கட்டிடங்களாக உருவாக்கப்பட்ட சொத்தின் மதிப்பு207கோடி ரூபாய்.

### மகத்தான திட்டங்கள்

தமிழகத்தின் வரலாற்றிலேயே இதுபோன்ற மாபெரும் அளவில் மகத்தான திட்டங்கள் நிறைவேற்றப்பட்டதாக வரலாறு இல்லை. வரலாறு காணாத இந்தத் திட்டம் இன்று சமுதாயத்தின் அடிப்படைத்தேவைகளை தீர்த்துமக்களின் மனங்களில் மன நிறைவை ஏற்படுத்தி உள்ளது என்பதை எவரும் மறுக்க முடியாது. தற்போது இத்திட்டம் பேரூராட்சிகளுக்கும் பல நகராட்சிகளுக்கும் விரிவு படுத்தப்பட்டுள்ளது.

1982-83 ஆம் ஆண்டில் பேரூராட்சிகளுக்குத் தன்னிறைவுத் திட்டத்தின் முதல் கட்டமாக 146 பேரூராட்சிகளில் ரூ. 5 கோடி முழு மான்யத்தில் விரிவாக்கப்பட்டுள்ளது.

அத்தியாவசியத் தேவைகள் பலவாக இருப்பினும் குடிநீர் வழங்குதல், இணைப்புச் சாலைகள், சிறு பாலங்கள், வடிகால்கள், ஆதி திராவிடர் குடியிருப்புகளிலிருந்து இடுகாட்டிற்குப் பாதை அமைப்பு தெரு விளக்குகள் மற்றும் சலவைத்துறை ஆகியபணிகளையே அரசு இத்திட்டத்தின் கீழ் தேர்ந்தெடுத்துள்ளது.

620 பேரூராட்சிகளுக்கும் தன்னிறைவுத் திட்டத்தின்கீழ் நிறைவேற்றப்படவிருக்கும் திட்டங்களுக்குத் தேவைப்படும் நிதி ரூ. 98.64 கோடி என அரசுக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

1983—84 ஆம் ஆண்டிற்கு இரண்டாவதுகட்டமாகத் திட்டத்தை 200 பேரூராட்சிகளில் செயல்படுத்துவதற்கு அரசு ரூ. 5கோடி அனுமதித்துள்ளது.

தமிழகத்திலுள்ள நலிவுற்றநகராட்சிகளில் முதல் கட்டமாக 20 நகராட்சிகளில், 1982-83லிருந்து தன்னிறைவுத் திட்டம் செம்மையாக நிறைவேற்றப்பட்டு வருகின்றது.

ஒவ்வொரு நகராட்சிக்கும், தமிழ்நாடு அரசு ரூ. 25 இலட்சம் அளித்துள்ளது. இதே போல 1983-84ம் ஆண்டிலும் இத்திட்டம் 30 நகராட்சிகளில் செயல்படுத்தப்பட்டுள்ளது.

### ஊரக வேலை வாய்ப்புத்திட்டம்

கிராமப்புற மக்களிடையே வேலையே இல்லாத நிலைமை ஒருபுறம். போதிய வேலை கிடைக்கவில்லையே என்ற கவலை சூழ்ந்த நிலை இன்னொருபுறம். இவற்றினைக் களைந்து, மக்களிடையே கூடுதலான வேலை வாய்ப்பை உருவாக்க வேண்டுமென்ற நோக்கத்தில் தான்தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டம் கொணரப்பட்டது.

கிராமத்திற்குத் தேவையான அடிப்படை வசதிகளைச் செய்து கொடுத்து, பொருளாதார நிலையைப் படிப்படியாக உயர்த்துவதும், மக்களின் வருவாயை அதிகரிப்பதும், சத்துள்ள உணவைப் பெறுவதற்கு வகை செய்வதும் இத்திட்டத்தின் அடிப்படைநோக்கமாகும்.

இத்திட்டம் தமிழ்நாட்டிலுள்ள 378 வட்டாரங்களிலும் நிறைவேற்றப்படுகின்றது. இத்திட்டத்தில் இதுவரை 1623 பள்ளிக்கட்டிடங்களும், 180 1சமுதாயக் கூடங்களும் கட்டப்பட்டுள்ளன. தவிர கடந்த ஆண்டுகளில் முடிவுறாத வேலைகளில் 5065 பணிகள் இவ்வாண்டில் இதுவரை முடிக்கப்பட்டுள்ளன. நடப்பாண்டிற்கென 7089பணிகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

### ரூ. 400 லட்சம் ஒதுக்கீடு

நடப்பு ஆண்டில் இத்திட்டத்தைச் செயல்படுத்த ரூ. 400 லட்சம் ஒதுக்கப்பட்டது. அதற்கும் மேலாக அண்மையில்பத்து கோடியே 89லட்சம்ரூபாய் மாவட்டங்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது 1983-84ம் ஆண்டிற்கு மட்டும் ஒதுக்கப்பட்ட அரிசியின் அளவு 13,124 மெட்ரிக் டன் ஆகும்.

தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியைச் சார்ந்தவர்களில், நடப்பாண்டில் மட்டும் 2.30 இலட்சம் பேர் வேலைவாய்ப்பு பெற்றுள்ளனர். இவ்வேலை வாய்ப்பினால் பயனடைந்த இம் மக்களின்எண்ணிக்கை மட்டும் 4.82 இலட்சமாகும்.

ஒரு குடும்பம் என்றால் அந்தக் குடும்பத்தின் தலைவன் மட்டும்உழைக்க மற்றவர்கள் அவருக்குச் சுமையாக இல்லாமல், ஏதோ தங்களால் இயன்ற வகையில் பொருள் ஈட்டி, மொத்தத்தில் குடும்பத்தின் வருவாயை உயர்த்த வழி வகுத்த திட்டம் தான் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம்.

இத்திட்டத்தின் ஓர் அங்கம் இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்புப் பயிற்சி. 'ட்ரைசெம்' என ஆங்கிலத்தில் அழைக்கப்படும் இந்தப் பயிற்சித் திட்டம் கிராமப்புற இளைஞர்கள் மற்றும் இளம்பெண்கள் வாழ்வில் நம்பிக்கை ஒளியைத் தோற்றுவித்துள்ளது.

### இளைஞர்கட்கு பயிற்சி

இந்தப் பயிற்சித்திட்டத்தின் கீழ் கிராம வாழ் இளைஞர்களுக்கு பல்வேறுதொழில்களில்பயிற்சி அளிக்கப்படுகிறது.

பயிற்சியின்போதுஉதவித் தொகை, பயிற்சி முடிந்த போது, சொந்தமாகத் தொழில் தொடங்க வங்கிகள் மூலம் கடன் உதவி போன்றவை ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டத்தின் உன்னத அம்சங்கள் ஆகும்.

1978ல் இத்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்ட போது ஒரு சில ஒன்றியங்களில்தான் நிறைவேற்றப்பட்டது. ஆனால் 2-10-1980 முதல் இத்திட்டம் தமிழகத்தின் அனைத்து ஊராட்சி ஒன்றியங்களிலும் அறிமுகப்படுத்தப்பட்டது. இத்திட்டம் முதன்முதலில் தொடங்கப்பட்ட போது ஒவ்வோர் ஒன்றியத்திற்கும் அளிக்கப்பட்ட உதவித் தொகையான ரூ.5 லட்சம் ஓராண்டிற்கு பிறகு ரூ. 6 லட்சமாக உயர்த்தப்பட்டு தற்போது ஒவ்வோர் ஒன்றியத்திற்கும் ரூ. 8 லட்சம் வழங்கப்பட்டு வருகிறது.

மானியமாக அளிக்க இந்த ஆண்டு மட்டும் வழங்கப்பட்ட தொகை ஏறத்தாழ ரூ 30 கோடி, இந்த மான்யத் தொகையில் பாதியை மத்திய அரசும், மீதிபாதியை மாநில அரசும் ஏற்கிறது.

வறுமைக் கோட்டிற்குக் கீழே உழலும், மக்கள் வாழ்வில் வளம் சேர்க்கும் இத்திட்டத்தின் கீழ், பயன்பெறும் சிறு விவசாயிகளுக்கு 25 சதவிகிதம் மான்யமாகவும், வேளாண்மைத் தொழிலாளர்களுக்கு 33.33 சதவிகிதம் மான்யமாகவும் வழங்கப்படுகிறது.

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு வட்டத்திற்கும் 600 குடும்பங்கள் வீதம், ஒவ்வோர் ஆண்டும் 2.56 லட்சம் குடும்பங்கள் பயனடைந்து வருகின்றன.

தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர்ஷெட்யூல்டு வகுப்பினர் ஆகியோர் இத்திட்டத்தின் கீழ் பயன் பெற முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

நம்நாட்டில் கிடைக்கும் நிலக்கரி நிலக்கரி வாயு, மண்எண்ணை, பெட்ரோல் போன்ற எரிபொருள்கள் மிகுந்த முதலீட்டில் கிடைக்கும் அரிதான எரி பொருள்கள் ஆகும்.

மழை வளம் தரும் காடுகளை அழித்துக் கொண்டே போனால் நாட்டில் வறட்சி ஏற்படும்.

### மாற்று திட்டம்

இந்தக் குறைபாட்டினை களைய மாற்று திட்டம் சாண எரிவாயுத் திட்டமாகும்.

தமிழக அரசு இத்திட்டத்தை முனைந்து முழு வேகத்துடன் கடந்த ஆண்டுகளில் நிறைவேற்றி பாராட்டுக்களைப் பெற்றுள்ளது. நடப்பாண்டில் 5000 சாண எரிவாயுக் கலன்களைத் தமிழகஅரசு நிறுவ முன் வந்துள்ளது

இதுவரை1323கலன்கள் ஏற்படுத்தப்பட்டு, செம்மையாகச் செயல்படுகின்றன என்பது மகிழ்ச்சியைத் தருவதாகும்.

தமிழகக் கிராமங்களிலே தன்னிறைவுத் திட்டம் சமுதாயத்தின் அடிப்படைத்தேவைகளை தீர்த்து வைத்தபின்னர், பேரூராட்சிகளிலும் நகராட்சிகளிலும் தன்னிறைவை ஏற்படுத்த முனைந்து வருகிறது.

### தொழிலாளர் வாழ்வு வளம் பெற...

தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டம் தனிப்பட்ட தொழிலாளர்களின் வாழ்வில் ஒளிபாய்ச்சி உழைப்பிற்கான ஊதியத்தையும் உணவுப் பொருளையும் அளிக்கிறது.

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சிதிட்டம்ஒவ்வொரு குடும்பத்திலும்விளக்கேற்றி வருகிறது. மொத்தத்தில், இத்திட்டங்கள் அனைத்தும் மக்கள் வாழ்விற்கு மனநிறைவு தரும் மகத்தான திட்டங்களாக அமைந்துள்ளன. தமிழகத்தில்நடைபெறும்வளர்ச்சிப் பணிகளைப்போல் வேறு எந்த மாநிலத்திலும் இவ்வளவுதிட்டங்கள் ஒருசேர நடைபெறவில்லை. புரட்சித்தலைவரின் ஆட்சிக்காலம் தான் தமிழக வரலாற்றில் பொன் எழுத்துக்களால் வைர வரிகளில் எழுதக் கூடிய ஒரு சரித்திரமாக இருக்கப்போகிறது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு பேசினார்.

---

## இலங்கைத் தமிழர் பிரச்சினை:

# தமிழக அரசு சரியான முறையில் அணுகி வருகிறது

## கருப்பையா மூப்பனார் பேட்டி

**சென்னை, செப் 6-இலங்கைத்தமிழர்பிரச்சினையில் தமிழக அரசு சரியான அணுகுமுறையைப் பின்பற்றிவருகிறது என்று கருப்பையா மூப்பனார் பாராட்டு தெரிவித்துள்ளார்.**

இலங்கைத் தமிழர் பிரச்சினையில் தி.மு.க.வினர் நடந்து வரும் போக்கிற்கும் அவர் கண்டனம் தெரிவித்தார்.

இந்திரா காங்கிரஸ் கட்சியின் அகில இந்திய பொதுச் செயலாளர் ஜி.கருப்பையா மூப்பனார் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

சில எதிர்க் கட்சிகள் இணைந்து செயல்படப் போவதாக அறிவித்துள்ளன. இதெல்லாம் வெறும் வேடிக்கையாகத் தான் இருக்கும்.

இவர்களால் எதையும் சாதிக்க முடியாது.

இவர்கள் எல்லாம் சேர்ந்து மத்திய அரசுக்கு எதிராக அணி உருவாக்குவது முயற்சி தோல்வியில் தான் முடியும்.

இதற்கு மக்கள் அளித்த தீர்ப்பே சாட்சியாக இருக்கிறது.

தமிழக சட்டசபையில் இந்திராகாங்கிரஸ்பிரதான எதிர்க்கட்சியாக ஆகி இருக்கிறது.

சட்டசபையில் இந்திரா காங்கிரஸ் பொறுப்பான வகையில் செயல்படும்.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் தமிழக அரசு அதன் உண்மை நிலைமையை உணர்ந்துள்ளது. சிக்கலான சூழ்நிலையில் சரியான அணுகுமுறையைப் பின்பற்றி வருகிறது

ஆனால் அதே நேரத்தில் தி.மு.க.வோஇதற்கு எதிர் வகையில் செயல்பட்டு வருகிறது,

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் தி.மு.க. துவேஷ உணர்ச்சியை உருவாக்கப் பார்க்கிறது.

இப்படி செயல்படுவது இலங்கைத் தமிழர்களது நலனுக்கு உகந்ததாக இராது.

இவ்வாறு மூப்பனார் கூறினார்.

---

# குடும்ப கார்டுகளுக்கு கூடுதல் பாமாயில்: புதிய உத்தரவு

சென்னை, செப். 6-குடும்பகார்டுதாரர்களுக்கு கூடுதலாக ''பாமாயில்'' எண்ணெய் வழங்குவதற்கான புதிய உத்தரவு ஒன்றை தமிழக அரசு பிறப்பித்திருக்கிறது.

இதன்படி சென்னை நகரம் மற்றும் புறநகர்ப் பகுதிகளில் கூடுதலாக 4 கிலோ கொண்ட டின்களிலோ அல்லது 2 கிலோ கொண்ட 2 டின்களிலோ பாமாயில் எண்ணெய் 3 மாதங்களுக்கு ஒருமுறை வழங்கப்படும். ஏற்கனவே குடும்ப அட்டை ஈரருக்கு பொது வினியோக முறையின் கீழ் வழங்கப்படும் 1 கிலோ பாமாயில் எண்ணெய் தவிர கூடுதலாக இந்த எண்ணெய் டின்களில் வழங்கப்படும்.

---

## இலங்கையில் இருந்து தப்பி வந்த

# மாணவி தொடர்ந்து படிக்க அரசு உதவி

சென்னை, செப். 6—இலங்கையில் சிங்கள வெறியர்களால் பாதிக்கப்பட்டு தமிழகம் வந்துள்ள தமிழர்களுக்கு புரட்சித் தலைவர் அரசு உதவி செய்து வருகிறது. தமிழகத்தில் தங்கிப் படிக்கும் மாணவ, மாணவிகளுக்குப் பணச்சங்கடம் ஏற்படாதிருக்க தகுந்த நடவடிக்கைகளை அரசு எடுத்துள்ளது.

கொழும்புவில் உள்ள புனித கிளேர் பெண்கள் பள்ளியைச் சேர்ந்தவர் மாணவிபவானி, இலங்கையில் நடந்த கலவரத்தால் பாதிக்கப்பட்டு தனது கல்வி சான்றிதழ்களை விட்டு விட்டு உயிரைக் கையில்பிடித்துக்கொண்டு தமிழகம் ஓடி வந்தார்.

அவர்தொடர்ந்துதனது படிப்பைமுடிக்க சென்னை அடையாறில் உள்ள அவ்வைமேல்நிலைப்பள்ளி பிளஸ் 2 வகுப்பில் அவரை சேர்த்துக் கொள்ள முன்வந்துள்ளது. கல்வித்தகுதி சான்றிதழ்கள் எதுவும் இல்லாமல் வந்துள்ள செல்விபவானி தனது படிப்பை தொடர்ந்து படிக்க தமிழக அரசால் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

அமெரிக்கா ஒப்புதல்

# உளவு பார்க்க ஒரு விமானத்தை அனுப்பியது உண்மை

லண்டன், செப், 6- உளவு பார்க்க ஒரு விமானத்தை சோவியத் எல்லையோரமாகப் பறக்க விட்டது உண்மை. எங்கள் உளவு விமானம் என்று நினைத்து தென்கொரிய பயணிகள் விமானத்தை சோவியத் போர் விமானம் சுட்டு வீழ்த்திவிட்டது என்று அமெரிக்கா தெரிவித்திருக்கிறது.

தென்கொரியபயணிகள் விமானம் சுட்டுவீழ்த்தப் பட்ட போது ஆர்.சி.135 ரக எங்கள் உளவு விமானம் 121 கிலோ மீட்டர் தூரத்தில் தான் பறந்து கொண்டிருந்தது. எங்கள் உளவு விமானத்தைத்தொடர்ந்து இன்னொரு உளவு விமானத்தையும் பறக்க விட்டிருக்கிறோம் என்று எண்ணி தென் கொரிய பயணிகள் விமானத்தை சோவியத் போர் விமானம் சுட்டு வீழ்த்தி விட்டது என்றும் அமெரிக்க அதிகாரிகள் தெரிவித்தனர்.

ஆர். சி. 135 ரக உளவு விமானங்களை அமெரிக்கா பயன்படுத்துவதை சோவியத் யூனியன் அம்பலப்படுத்திய பின்னர் முதன் முறையாக இப்போது அமெரிக்கா அத்தகைய உளவு விமானங்களை பயன்படுத்துவது உண்மை தான் என்று ஒப்பு கொண்டிருக்கிறது.

தென்கொரிய பயணிகள் விமானமும் எங்கள் உளவு விமானமும் ஒன்றை ஒன்று பின்தொடர்ந்து சென்று இருக்கலாம் ஆயுதக் கட்டுப்பாடு விதிகளை சோவியத் யூனியன் மீறுகிறதா என்று பார்ப்பதற்காக எங்கள் உளவு விமானத்தை சோவியத் எல்லையோரமாகப்பறக்க விட்டோம் என்று அமெரிக்க அதிகாரிகள் கூறினர்.

## சோவியத் கருத்து

தென்கொரிய பயணிகள் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது பற்றி சோவியத் யூனியன் கூறுவதாவது:

தென் கொரிய பயணிகள் விமானமும் அமெரிக்க உளவு விமானமும் சோவியத் ராடார் சாதனத்தில் தெரிந்தன. ஒன்றையொன்று முந்திக் கொண்டு ஒரே பாதையில் பறந்தன

தென் கொரிய பயணிகள் விமானமும்அமெரிக்க உளவு விமானமும் ஒரே வடிவம் கொண்டவை. தென்கொரிய பயணிகள் விமானத்தில் விட்டுவிட்டு எரியும் எக்குகள் எரியவில்லை. எங்கள் போர் விமானங்கள் அந்த விமானத்தைப் பின் தொடர்ந்தன. தென்கொரிய பயணி விமானத்தின் விமானியோடு தொடர்பு கொண்டன. ஆனால் எந்தக் கேள்விக்கும் விமானி பதில் அளிக்கவில்லை.

சோவியத் வானவெளி எல்லைக்குள் அத்துமீறி வேண்டுமென்றே சர்வதேச விதிகளுக்கு மாறாக அந்த விமானம் பறந்து கொண்டே இருந்தது. அந்தப் பயணிகள் விமானத்தை தரையில் இறக்க இரண்டு மணி நேரமாக சோவியத் போர் விமானங்கள் முயன்றன. அந்த முயற்சி பலன் அளிக்கவில்லை.

சோவியத் வானவெளிக்குள் வெகுதூரம் ஊடுருவி தென் கொரிய பயணிகள் விமானம் பறப்பதை அமெரிக்க உளவு இலாகா விமானமே எச்சரித்திருக்கலாம். அமெரிக்க, ஜப்பான் விமானப் போக்குவரத்துக் கண்காணிப்பு நிலையங்களும் அந்த விமானத்திற்குச் சொல்லி இருக்கலாம் ஏன் சொல்லவில்லை என்பது தான் புரியவில்லை.

இவ்வாறு சோவியத் யூனியன் கூறியிருக்கிறது.

விமானத்தை சுட்டு வீழ்த்தியது ரஷ்யாவே;

## டேப்பைஆதாரம் காட்டுகிறார்ரீகன்

வாஷிங்டன், செப், 6- தென் கொரிய விமானத்தை சுட்டு வீழ்த்திய ரஷ்யா விமானப் படை வீரரின் பேச்சு அடங்கிய டேப்பை போட்டுக் காட்டி அமெரிக்க ஜனாதிபதி ரீகன் ரஷ்யாவின் செயலைக் கண்டித்துள்ளார்.

அமெரிக்க டெலிவிஷனில் ரீகன் உரையாற்றும் போதே ரீகன் டேப் ரிக்கார்டரில் தென்கொரிய விமானத்தைச் சுட்டு வீழ்த்தியவரின் பேச்சைப்போட்டுக்காட்டினார்.

## கல்வித்துறை: ஓய்வு பெற்ற அதிகாரிகட்கு பாராட்டு

சென்னை, செப். 6- பள்ளிக்கல்வி இயக்குனரகத்தில் பணியாற்றிஓய்வு பெற்ற கூடுதல் இயக்குனர் எஸ்.ஏ. சுப்ரமணியம் நிதிக் கட்டுப்பாடு அலுவலர் ஏ. பிச்சையன் வாசகர் வைத்திய நாதன் கண்காணிப்பாளர் ஏ. அரங்சாமி, திரைப் பட ஒட்டுனர் ஜெகன்னாதன் தபேதார் வரதன் ஆகியோருக்கு பாராட்டு விழா நடைபெற்றது.

விழாவிற்கு பள்ளி கல்வி இயக்குனர் ஜே.ஏ. ரயான் தலைமை பொன்சுசீலாவரவேற்வகிக்கறார். க. கலியபெருமாள் மற்றும் அதிகாரிகளும் பாராட்டிப் பேசினார்கள்.

டி.ஆர். அண்ணாமலை நன்றி கூறினார்.

தாய் நாட்டில் படித்து பட்டம் பெற்று

# வெளிநாடுகளில் வேலை செய்வதா? அமைச்சர் கண்டனம்

சென்னை, செப் 6- தமிழகத்தில் படித்து பட்டம் பெற்றுவிட்டு நமதுநாட்டிற்குஆற்றலைப் பயன்படுத்தாமல் வெளிநாட்டில் சென்று பணியாற்றுவது கண்டிக்கத்தக்கது என்று அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற ஆசிரியர் தின விழாவில் அமைச்சர் அரங்கநாயகம் நல்லாசிரியர் விருதுகளை வழங்கினார்.

விருதுகளை வழங்கி அமைச்சர் அரங்கநாயகம் பேசுகையில் கூறியதாவது:

சென்னை அடையாறில் உள்ள தொழில் நுட்பக் கல்லூரிக்கு மத்திய அரசு 5 முதல் 6 கோடி ரூபாய்வரை செலவழிக்கிறது. இந்த நிறுவனத்திற்கு பல்கலைக் கழக சிறப்புத்தகுதி அளிக்கப்பட்டுள்ளது,

ஆனால் இங்கு படித்து பட்டம் பெற்று வெளி வரும் மாணவர்களின் அறிவும் ஆற்றலும் நமது நாட்டிற்கு கிடைப்பதில்லை. அவர்களில் பெரும்பாலோர் மேல் நாடுகளுக்கு சென்று பணியாற்றுகிறார்கள். இதை நாம் கண்டித்தே ஆக வேண்டும்.

### உறுதிமொழி

நான் சமீபத்தில் ரஷ்யாசென்றிருந்தபோது அங்குள்ள லுமும்பா பல்கலைக்கழக துணை வேந்தரைச் சந்தித்தேன். இந்த பல்கலைக்கழகத்தில் தங்கி படிக்கும் வெளி நாட்டு மாணவர்களிடம் "தங்களது சொந்த நாட்டின் நலனுக்காக இப்பல்கலைக் கழகத்தில் நான் பெற்ற அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்துவேன்" என்ற உறுதிமொழியை மாணவர்களிடம் எழுதி வாங்கிக் கொள்வதாக அத்துணைவேந்தர் என்னிடம் தெரிவித்தார். இது வரவேற்கத்தக்க ஒரு அம்சமாகும்.

### தாய் நாட்டு உணர்வு

நம்நாட்டு மாணவர்களுக்கு தாய்நாட்டு உணர்வையும் நம் சமுதாயத்திற்கு தனது அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்த வேண்டும் என்ற உணர்வையும் நம் ஆசிரியர்கள் ஏற்படுத்த வேண்டும்

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

விழாவில் அரசு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் கல்வித் துறை செயலாளர் தி. து. சுந்தரராஜ், மாவட்ட ஆட்சித்தலைவர் சுந்தர மூர்த்தி, பள்ளிக்கல்வி இயக்குநர் ஜே.ஏ.ரயான் ஆகியோர் பேசினர்.

காவல் துறை

தமிழ்நாடு சிறப்புக் காவல் அணிகளுக்கு

## காவலர் பதவிக்கு ஆள்சேர்ப்பு அறிவிப்பு

18-9-83 அன்று தமிழ்நாடு சிறப்புக் காவல் அணிகளின் தலைமையிடங்களில் காவலர் பதவிகளுக்கான தேர்வு நடைபெறும்.

2 தகுதிகள்

அ. கல்வித் தகுதி

தமிழில் நன்கு பேசவும் எழுதவும் தெரிந்திருக்க வேண்டும். ஒரு கட்டளை அல்லது அறிவுரையை பிறர் சொல்லக் கேட்டு அதனை எழுதத் தெரிந்திருக்க வேண்டும்.

ஆ. உடல் தகுதி

உயரம் —168 செ மீ.

மார்பளவு —மூச்சை முழுவதுமாக உள்ளே இழுக்கும் போது மார்புச் சுற்றளவு குறைந்தது ஐந்து செ மீ. விரிவடைந்து 86 செ மீக்கு குறையாது இருக்க வேண்டும்,

இ. வயது

1-7-83 அன்று 18 வயது பூர்த்தியானவராகவும் 2 வயதிற்கு மேற்படாதவராகவும் இருக்க வேண்டும். ஆதி திராவிட/பழங்குடி வகுப்பினருக்கு அதிக பட்ச வயது வரம்பு 33 ஆகும்.

பிற்பட்ட வகுப்பினரில் பட்டதாரிகளுக்கு அதிக பட்ச வயது வரம்பு 33 ஆகும்.

முன்னாள் இராணுவத்தினர் வயது அவர்கள் இராணுவத்தில் பணிபுரிந்த காலத்தைக் கழித்துக் கணக்கிட்ட பின்னர் 28 க்குள் இருந்தால் அவர்களும் விண்ணப்பிக்கலாம்.

3 விண்ணப்பதாரர்கள் கீழ்காணும் மூன்று உடல் திறன் சோதனைகளில் ஒவ்வொன்றுக்கும் எதிராக குறிப்பிட்டுள்ள அளவுகளில் தகுதிபெறவேண்டும்.

| | | |
|---|---|---|
| அ. | நீளந்தாண்டுதல் | 4 மீட்டர் |
| ஆ. | கயிறு ஏறுதல் | 3 மீட்டர் 65 செ. மீ. |
| இ. | 1500 மீ. ஓட்டம் | 6 நி. 36 வினாடிக்குள் |

4. விண்ணப்பதாரர்கள் கீழ்க்கண்டவைகளுக்கு அசல் சான்றிதழ்களையும் இரண்டு சான்றளிக்கப்பட்ட நகல்களையும் தங்களுடன் கொண்டு வரவேண்டும்.

1. வயது
2. கல்வித்தகுதி
3. இனம்
4. ஐந்து மார்பு அளவு புகைப்படங்கள்
5. ஒவ்வொரு அணியிலும் உள்ள தோராயமான காலியிடங்கள்.

பின்வருமாறு:

| | அணி | தோராயமான காலியிடங்கள் |
|---|---|---|
| 1. | தமிழ்நாடு சிறப்புக் காவல் முதலாம் அணி, திருச்சி | 28 |
| 2. | தமிழ்நாடு சிறப்புக் காவல் மூன்றாம் அணி, மணிமுத்தாறு | 8 |
| 3. | தமிழ்நாடு சிறப்புக் காவல் நான்காம் அணி, கோவைப்புதூர் | 65 |
| 4. | தமிழ்நாடு சிறப்புக் காவல் ஐந்தாம் அணி ஆவடி | 51 |
| 5. | தமிழ்நாடு சிறப்புக் காவல் ஆறாம் அணி, ஆவடி | 73 |
| 6. | தமிழ்நாடு சிறப்புக் காவல் ஏழாம் அணி, பழனி | 47 |

மேலே குறிப்பிட்டுள்ள காலியிடங்களில் 50 சதவீதம் பின் தங்கிய வகுப்பினருக்கும் 18 சதவீதம் ஆதிதிராவிடர் பழங்குடி மக்கள் ஆகியோருக்கும் எஞ்சிய இடங்கள் தகுதி அடிப்படையில் பொதுவாக எல்லா வகுப்பினர்களிலிருந்தும் நியமனம் செய்யப்படுவதற்காக ஒதுக்கப்படும்.

6. பயிற்சி:- காவலர் பதவிகளுக்கு தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் 6 மாத காலம் ஆவடியிலுள்ள படைப் பயிற்சி மையத்தில் பயிற்சி பெறவேண்டும்.

7. சம்பளம் மற்றும் இதர படிகள்:

காவலர் பதவிகளுக்கான சம்பள விகிதம் ரூ, 280-5-320 - 10-450 ஆகும். மற்றும் நடைமுறையில் உள்ள ஆணைப்படி இதர படிகளும் வழங்கப்படும்.

8. வாகனம் ஓட்டுதல், தட்டச்சு, ஐ. டி. ஐ, மற்றும் விளையாட்டுத்துறை ஆகியவற்றில் தகுதி பெற்றவர்கள் அவற்றிற்கான அசல் உரிமம், சான்றிதழ் ஆகியவற்றையும் அவற்றின் சான்றளிக்கப்பட்ட நகல்கள் ஆகியவற்றையும் கொண்டுவர வேண்டும்.

9. மேற்குறித்த தகுதிகள் உடைய விண்ணப்பதாரர்கள் அந்தந்த அணித் தலைமை இடங்களில் 18-9-83 ஞாயிற்றுக்கிழமை காலை 6 மணி அளவில் அணித் தளவாய்கள் முன்பு கவாத்து மைதானங்களில் ஆஜராக வேண்டும்.

10. இத்தேர்வினை ஒட்டி நடைபெறும் உடல் தகுதிகள் சரிபார்த்தல், உடல் திறன்தேர்வு, எழுத்துத் தேர்வு மற்றும் மருத்துவப் பரிசோதனை ஆகியவற்றிற்கு விண்ணப்பதாரர்கள் தங்கள் சொந்த செலவிலேயே ஆஜராகவேண்டும்.

11. இத்தேர்வுக்கு முன் விண்ணப்பம் எதுவும் அனுப்பத்தேவையில்லை.

காவல்துறை இயக்குநர்

டி.ஐ.பி.ஆர்-55290-83-1 ஏ பி ஆர் சி

டெல்லியில்

## நிதியமைச்சர் நாவலர்- அமிர்தலிங்கம் சந்திப்பு

புதுடெல்லி, செப். 6- இலங்கை தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி பொதுச்செயலாளர் அமிர்தலிங்கம் டெல்லி வந்துள்ளது தெரிந்ததே.

இங்கு வந்துள்ள தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலரை அமிர்தலிங்கம் சந்தித்து 30 நிமிட நேரம் பேசினார்.

## உணவு மற்றும் கூட்டுறவு துறைகள் மாற்றியமைப்பு

சென்னை, செப். 6— உணவு மற்றும் கூட்டுறவு துறைகளைத் தனித் தனியாக பிரித்து தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

உணவுத்துறைச் செயலாளராக என். கிருஷ்ண மூர்த்தி நீடிப்பார்.

தற்போது விவசாயத் துறை செயலாளராக உள்ள டி. வி. துரைராஜ் கூட்டுறவுத்துறை செயலாளராக நியமிக்கப்பட்டுள்ளார்.

விவசாயத்துறை செயலாளராக விவசாயப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் ஏ. வெங்கட்ராமன் நியமிக்கப் பட்டுள்ளார்.

## ரஷ்ய விமானத்திற்கு கனடா தடை

ஒட்டாவா செப் 6— தென் கொரிய விமானத்தை ரஷ்யாசுட்டு வீழ்த்தியதை தொடர்ந்து ரஷ்ய நாட்டு விமானப் போக்குவரத்து நிறுவனமான 'ஏரோபிளாட்' விமானங்கள் கனடாவுக்குள் வர 60 நாட்களுக்கு கனடா அரசு தடை விதித்துள்ளது

சுட்டு வீழ்த்தப்பட்ட தென் [illegible] விமான தில் [illegible] 61 ப [illegible] க [illegible] [illegible] சேர்ந்தவர்கள் ஆவார்கள்.

# பரிசு சீட்டு முடிவுகள்

### கங்கா - காவேரி

புதுடெல்லி, செப். 6— லட்சுமணபுரியில் நேற்று நடந்த கங்கா காவேரி லாட்டரியின் 8 வது குலுக்கல் முடிவுகள் வருமாறு:

முதல் பரிசு
(தலா ரூ 1 லட்சம்)
ஜிகியூ 145876
ஜிஆர் 415778

2வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
ஜிகியூ179902 ஜிஆர் 592922

3வது பரிசு
(தலா ரூ 1000)
ஜிகியூ வரிசை:
483565 491275 169043
278317 478235 146645
ஜிஆர் வரிசை:-
247671 598743 115456
574350 5 2147 314846
(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

4-வது பரிசு
(தலா ரூ. 500)
73555 88640 95876
77751 83532 63058
05559 52040 84927
21552

5 வது பரிசு
(தலா ரூ. 50)
6460 2627 5444 4446
4471 5217 8665 7852
7480 6818

6-வது பரிசு
(தலா ரூ 10)
264 122 756 491 031
862 560 261 844 458

7-வது பரிசு
(தலா ரூ. 5)
021 150 064 229 005
276 110 232 188 325
374 572 320 520 423
501 499 640 465 684
657 825 774 835 731
923 763 920 845 926

ஏஜெண்டுகள் பரிசு
(தலா ரூ. 25)
6284 7895
(விற்பனையாளர் பரிசு)
(தலா ரூ. 10)
968

### மகாலட்சுமி

அரியானா [illegible]லட்சுமி லாட்டரியின் 299-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:

முதல் பரிசு
(தலா ரூ 1 லட்சம்)
டி 855445

2 வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
[illegible] 729785 பி 900332
[illegible] 888212 டி 806540
([illegible] கண்ட எண்களில் [illegible] எல்லா வ[illegible]சைசீட்டு[illegible] [illegible]கும் பரிசு உண்டு.

3 வது பரிசு
(த[illegible] ரூ 1000)
93568 08695 80656

88316 41663 07203
01784 83355 59576
88546

4-வது பரிசு
(தலா ரூ. 100)
5975 6864 6866 8278
5756 4893 7246 0118
1787 1594

5-வது பரிசு
(தலா ரூ. 20)
1519 1054 6702 4418
9702 7063 5008 1108
8776 8648

6-வது பரிசு
(தலா ரூ 10)
077 531 157 602 258 719
304 898 420 914

7வது பரிசு
(தலா ரூ. 5)
043 567 175 632 280
760 320 805 405 926

கஞ்சன் ஜங்கா

### கோவைக்கு ரூ. 2 லடசம்

சிக்கிம் மாநில கஞ்சன் ஜங்கா லாட்டரியின் 18 வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(ரூ. 2 லட்சம்)
சி 300142

ஆறுதல் பரிசு
(தலா ரூ 1000)
ஏ 300142 பி. 300142

2 வது பரிசு
(ரூ. 50 ஆயிரம்)
ஏ 743097 (பாட்னா)

3-வது பரிசு
(தலா ரூ 20 ஆயிரம்)
ஏ 507204 பி 509241
சி 861240

4வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
ஏ 626201 பி 280301
சி 516001
(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசைசீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

5-வது பரிசு
(தலா ரூ. 1000)
98141 74036 24216
30431 79411 00011
37966 93020 05933
21933

6-வது பரிசு
(தலா ரூ. 100)
9232 4274 5631 0533
6194 9874 1138 1242
5232 8888

7-வது பரிசு
(தலா ரூ. 50)
1908 7695 7650 0699
1226 1581 9882 8203
3903 0226

8 வது பரிசு
(தலா ரூ 20)
7189 7511 6022 1021
3227 2525 0352 2156
1044 8302 3839 9913
5400 3202 0574 6397
6843 3196 4595 9129

9-வது பரிசு
(தலா ரூ. 10)
395 935

ஏஜெண்டுகள் பரிசு
(தலா ரூ. 50)
0304

### ராஜலட்சுமி

அசாம் ராஜலட்சுமி லாட்டரியின் 163-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(தலா ரூ. 1 லட்சம்)
ஆர் ஏ 728907
ஆர் பி 356210
ஆர் சி 664592

2- வது பரிசு
(தலா ரூ. 10 ஆயிரம்)
ஆர்ஏ520113 ஆர்பி151873
ஆர்சி 152530
(கீழ்க்கண்டஎண்களில்முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

3 வது பரிசு
(தலா ரூ. 1000)
04939 62611 46530
65362 52696 76624
53357 92187 59815
93832

4-வது பரிசு
(தலா ரூ. 100)
0736 4039 1110 4717
1656 5600 2391 7823
2970 9573

5-வது பரிசு
(தலா ரூ. 50)
0399 7366 1754 7729
4762 7981 6045 8141
6815 9190

6- வது பரிசு
(தலா ரூ 20)
0828 6277 3028 6450
3233 6525 3249 8683
3848 9081

7-வது பரிசு
(தலா ரூ 10)
030 508 131 602 253 714
321 863 419 953

### கேரள பம்பர்

கேரள லாட்டரியின் ஓணம் பம்பர் குலுக்கல் முடிவுகள் வருமாறு:—

முதல் பரிசு
(ரூ 25 லட்சம்)
ஓஓ 890488 (கோவை)
(இதே எண் உள்ள மற்ற வரிசை சிட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு)

2-வது பரிசு
(தலா ரூ. 1 லட்சம்)
ஓஓ 921059
ஓ என் 400970
ஓ ஏ 330021
ஓ எம் 297933
ஓ கே 208225

3 வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
ஓஓ 673995 ஓஎன் 870152
ஓஏ 204139 ஓஎம் 721332
ஓகே 841284

4-வது பரிசு
(தலா ரூ. 5000)
ஓ ஓ 134430
ஓ என் 866033
ஓ ஏ 740181
ஓ எம் 453732
ஓ கே 261554

5- வது பரிசு
(தலா ரூ 1000)
ஓஓ வரிசை:-
721271 565098 834106
713933 724364
ஓ என் வரிசை:-
744401 896681 103162
905566 616510
ஓஏ வரிசை:-
389033 551420 474026
964026 892423
ஓ எம் வரிசை:-
584516 411124 412955
227737 504588
ஓ கே வரிசை:-
544869 878182 547113
319463 829347

6-வது பரிசு
(தலா ரூ. 500)
ஓ ஓ வரிசை
631744 707429 799660
196982 942279 157962
712915 786895 861097
282573.
ஓஎன் வரிசை—
780632 447954 513003
141453 653740 709072
473007 926501 444313
234653
ஓஏ வரிசை:
508479 821421 113125
292530 401879 671646
921994 610644 630887
508351
ஓஎம் வரிசை:-
939042 104996 647492
683229 502403 508721
916652 964896 791788
997978
ஓகே வரிசை:-
462903 173614 741317
540617 796946 316254
794606 654751 453225
138609

7-வது பரிசு
தலா ரூ. 100
50199 65269 25777
12121 00831 35387
65745 77843 02083
81558

8-வது பரிசு
(தலா ரூ. 50)
8625 7099 3277 9873
2918 7355 5783 2237
3837 7092

9-வது பரிசு
(தலா ரூ 20)
361



## உக்கம்சந்த் தலைமையில் நடந்த திருமணம்

செங்கல்பட்டு, செப். 6— செங்கல்பட்டு மாவட்டம் பழமத்தூரைச் சேர்ந்த கே. ஏழுமலை மகன் வெங்கடேசனுக்கும், செங்கல்பட்டு சப்போஸ்ட் மாஸ்டர் டி. கோவிந்தராஜன் மகள் ராணி மங்கம்மாளுக்கும் கடந்த 4-ம் தேதி ஞாயிறு காலை 9 மணி அளவில் செங்கல்பட்டு சீனிவாசா திருமண மண்டபத்தில், கழக சட்டமன்ற உறுப்பினர் எஸ்.டி.உக்கம்சந்த் தலைமையில் திருமணம் நடைபெற்றது.

பழமத்தூர் கிளைக்கழக செயலாளர் பி.எஸ். பெருமாள் வரவேற்றுப் பேசினார். மதுராந்தகம் ஊராட்சி ஒன்றிய முன்னாள் பெருந்தலைவர் எம்.ஆர். சஞ்சீவி, புக்கத்துரை சி. ஆத்மராமன் சுங்க இலாகா அதிகாரி சு. க. நாராயணசாமி, டாக்டர் எம். சுந்தரம், செங்கை நகரச் செயலாளர் செ. து. வரதராசன், பள்ளித்துணை ஆய்வாளர் க. ச. ரத்தினவேலு, ஏ. மணிவாசகம், ஆசிரியர் கூட்டணி செயலாளர் ம. ச. முனுசாமி, முகவை முரசன், எஸ். தாமஸ் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

பழமத்தூர் திருவள்ளுவர் நற்பணி மன்றத்தினர் மற்றும் நகர பிரமுகர்கள், கழகத் தோழர்கள், உறவினர்கள் பலரும் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினர்.

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS 600 029
EDITOR: E. PARASURAMAN